ஓம் தத்ஸத்.

# சிவ விஷ்ணு விவேகம்.

சிவ விஷ்ணு [illegible] ரயும.

[illegible]

இஃது

திண்டுக்கல்

பதமநாபன [illegible]

இயற்றப்பட்டு

சென்னை

'கம்மெர்ஷியல்" அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1917

PRICE AS 1½] [விலை அணா 1½

ஓம்.

சமஸ்கிருத வித்துவானும், சென்னை, திருவல்லி கேணி கெல்லட் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதருமாகி பிரம்மஸ்ரீ, C. S. நாராயணசாமி ஐயர் அவர்கள் இயற்றிய

விருத்தம.

அரியரார் விவேகம் யார்க்கு மவசிய மென்ன வன்றோர்
விரிவுறு புராணத் துற்ற விடயமோ டுண்மை காட்டித்
தெரிவுறத் தந்தா னிந்தத் தீங்கவி யமைந்த நூலைப்
பரிவுடன் பதும நாபன் பரவைசூழ் பாரு ளார்க்கே.

—— ——

ஓம் தத்ஸத்.

# சிவ விஷ்ணு விவேகம்.

## மூலமும் கருத்துரையும்.

---

### க. சைவ வைஷ்ணவ வாதம்.

---

### வெண்பா.

நீடு மழலுருவாய் நின்றபரன் றன்னடியைத்
தேடி யறியான் திருமால்—கூடியகம்
நாடித் தவஞ்செய்து நாரணன் றன்னையுகம்
தேடி யறியான் சிவன்.

(விஷ்ணு அக்கினி மயமாய நின்ற சிவனது அடியைத்தேடிக் காணான். சிவன் யுகமாகத் தவஞ்செய்து விஷ்ணுவைக்கண்டறியானென்பதாம்.) (க)

பிறவி யிலானென்று பேர்கொண் டயன்பால்
பிறவி யெடுத்தான்முன் பித்தன்—சிறவாப்
பிறவியிலா ஞதியென்று பேர்கொண்டு பத்துப்
பிறவி யெடுத்தான்மால் பேர்த்து.

(சிவன் பிறப்பில்லாதவனென்று பேர்கொண்டு பிரமனிடம் அவன் புத்திரனாய்ப்பிறந்தான். விஷ்ணு பிறப்பில்லாத ஆதிமூல மென்றுபேர்கொண்டு பத்துப்பிறவிகள் எடுத்தானென்பதாம்.) (உ)

**கண்ணுதல் தன்னடியைக் கண்மலராற் பூசித்துக்**
**கண்ணன் திகிரிபெற்றான் கார்வண்ணன்—எண்ணி**
**கண்ணன்றன் றாழியைக் கண்மலராற் பூசித்துக் [முறை**
**கண்ணுதல் சூலம்பெற்றான் காண்.**

விஷ்ணு தன் கண்மலர் (கண்ணாகிய மலர்) கொண்டு சிவனை அர்ச்சித்துச் சக்கராயுதம் பெற்றான். சிவன் கண்மலர் (கள்-தேன், மதுமலர்) கொண்டு திருவாழியாழ்வானை அர்ச்சித்துச் சூலாயுதம் பெற்றான் என்பதாம்.) (௩)

பங்கயக் கண்ணன் பதத்திற் பெருகிவரும்
கங்கையைக் கொண்டான் கறைமிடற்றன்—பங்கமற
அங்கயற் கண்ணிதன் னங்குலியிற் றோன்றியிடும்
கங்கையைக் கொண்டான்மால் காண்.

(சிவன் விஷ்ணுவின் பதத்திலுண்டான கங்கையைத் தன் சிரசிலேற்றான். விஷ்ணு பார்வதி விரலிலுண்டான கங்கையைத் தன் உலகில் ஏற்றான் என்பதாம்.) (௪)

பந்தமறு சேதுவில் பண்டுமகா தேவனைச்
சிந்தனை செய்தான் செயராமன்—தொந்தமற
இந்துசிரத் தேவ னிராமனைக் காசியில்
சிந்தனை செய்வான் சிறந்து.

(இராமன் இராமேசுவரத்தில் சிவனை நினைத்துப் பூஜித்தான். சிவன் காசியில் இராமநாம ஸ்மரணை செய்வான் என்பதாம்.) (௫)

பொருபோர்க் களத்தில் புயல்வணனைத் தாங்கித்
திருவடி யானான்மா தேவன்—மருவிப்
பொருபோர்க் களத்தில் புராரியைத் தாங்கிக்
கருதும்விடை யானான்மால் காண்.

(சிவன் யுத்தபூமியில் விஷ்ணுவைத் தாங்கித் திருவடியானான். விஷ்ணு யுத்த பூமியில் சிவனைத் தாங்கி மால்விடை யானான் என்பதாம். திருவடி-அனுமான். விடை-ரிஷபம்.) (௬)

மண்ணணி லரவாகி வாரியிற் பாம்பணையா
மண்ணனை யணியும் வன்மாலி—எண்ணியிட
எண்ணணி லரவ மிணைத்துத்த னங்கமெல்லாம்
வெண்ணணி தணியுமரன் மேல்.

(விஷ்ணு பூமியைச் சுமக்கும் பாம்பாய்க் கடலில் பாம்பை அணையாக்கித் திருமகள் தரிப்பன். சிவன் அளவற்ற பாம்புகளைத் தன் அங்கத்தின் மேலெல்லாம் கொண்டு வெண்ணீறு பூசுவன் என்பதாம்.) (௭)

எண்ணுமோர் கள்வனா யேழைபங் காவியுடன்
மண்ணுங்கொண் டடியுண்டான் மாதேவன்—மண்ணறி
எண்ணுமோர் கள்வனா யேழையர்க டம்மனையில் [ய
வெண்ணெய்கொண் டடியுண்டான் விண்டு.

(சிவன் தன்னைக் கள்வனென்று எண்ணும்படி ஒரு ஏழை ஸ்திரீயிடம் பிட்டமுது கொண்டு மண்ணெடுத்து அடியுண்டான். விஷ்ணு கோபிகா ஸ்திரீகள் வீடுகளில் வெண்ணெய் திருடி அடியுண்டான் என்பதாம்.) (௮)

மேவிய வாதரத்தால் மேகவண னாயரூர்க்
கோவியரொ டாடுமே கோபாலன்—தாவமற
மேவிய வாதரத்தால் மேலோ னிருடியர்தம்
தேவியரொ டாடுஞ் சிவன்.

(விஷ்ணு ஆசைமீதூர ஆயர்பாடிக் கோபிகளுடன் கூடி ஆடினான். சிவன் ஆசைமீதூரத் தாருகாவனத்து ரிஷிபத்தினிகளுடன் கூடி ஆடினான் என்பதாம்.) (௯)

மால்கொண்ட பெண்ணுருவின் வண்மை யதுகண்டு
மால்கொண்டு நின்றான் மகாதேவன்—மேலாக
வேல்கொண்ட கண்ணாள் விருந்தையவள் பின்சென்று
மால்கொண்டு நின்றான்காண் மால்.

(சிவன் விஷ்ணு எடுத்த மோகினி வடிவைக்கண்டு மயங்கி நின்றான். விஷ்ணு ஜலந்தரன் மனைவியாகிய விருந்தை பின்சென்று மயங்கி நின்றானென்பதாம்.) (௧௦)

வீரன்சரா சந்தன் விளைக்கும் பெரும்போரில்
தூர விடைந்தான் துளவணிந்தோன்—பாரறிய
சூரமிகு வாணனமர் துன்னிதிரு மாலுக்குப்
போரி லரனிடைந்தான் போய்.

(விஷ்ணு வீரனுகிய சராசந்தன் விளைத்த பெரியபோரில் தோற்றுப் பின்னிடைந்தான். சிவன் பாணசுர யுத்தத்திற் போய் கலந்து விஷ்ணுவுக்குத் தோற்றுப் பின்னிடைந்தான் என்பதாம். வீரன் சராசந்தன்-வீரபத்திரனும் சராசந்தனும்எனவுமாம்.) (கக

தீயவிரு கற்குத் தெரிதரா தோடியே
காயதிற் புக்கான் கறைக்கண்டன்—மாயமாய்த்
தீயயவ னற்குத் தெரிதரா தோடியே
மாயவன் கல்லொளிந்தான் மால்.

(சிவன் பஸ்மாசுரனுக்குப் பயந்தோடி ஐவிரலிக்காயி லொளிந்தான். விஷ்ணு காலயவனனுக்குத் தோற்றோடி மலைக்குகையில் ஒளிந்தான் என்பதாம்.) (கஉ)

நீடு பெருங்குற்றம் நேரு மதுதீர
நீடுலகில் வந்துதிப்ப னேமியன்காண்—தேடியே
நீடு பெருங்குற்றம் நேரு மதுதீர
வீடுதொறு மேற்பனரன் வேட்டு.

(விஷ்ணு தன்பால் குற்றம் (சாபம்) உண்டாக அது தீரும்படி பூமியில் வந்து பிறந்தான். சிவன் தன் பால் குற்றம் (பிரமஹத்தி தோஷம்) உண்டாக அது தீரும்படி வீடுகளில் யாசித்து இரந்தான் என்பதாம், குற்றம், உலகில் உண்டான குறையெனவுமாம்.)(கங)

ஆனவுல கீற்றி லயனரியைக் கொன்றழித்துத்
தானொருவ னய்நிற்பன் சங்கரன்காண்—ஞானகமாய்
ஆனவுல கீற்றி லயனரனைக் கொண்டெடுக்கித்
தானொருவ னிற்பனரி தான்.

(சிவன் உலகமுடிவில் பிரமனையும் விஷ்ணுவையும் கொன்றழித்துத் தான் ஒருவனாய் நிற்பன். விஷ்ணு உலகமுடிவில் பிரமனையும் சிவனையும் தன்னிலொடுக்கித் தான் ஒருவனாய் நிற்பன் என்பதாம்.) (கச)

---

## உ. சிவவிஷ்ணு சமரசம்.

---

### வெண்பா.

மதப்போ ரொழிக மதநிந்தை தீர்க
மதப்போர் வதைபோய் மறைக—மதப்போர்போய்
ஏகம்சத் விப்ரா பகுதா வதந்தியென்
றேகமா யாக வினைந்து.

(மதப்போரும் மதநிந்தையும் மதக்கொலையும் ஒழிந்து, "உள்ளது ஒன்றே; அதனை மகான்கள் பலவிதம் சொல்வர்" என்பதையறிந்து எல்லாம் ஒன்றாய்ச் சமாதான மரமாதாக என்பதாம்.)

### அம்மானை.

திருநீல கண்டன் திரியம் பகன்பெருமை
திருமால் திருமகட்குச் செப்பினா னம்மானை
திருமால் திருமகட்குச் செப்பினா னாமாயின்
திருமால் பெருமையது செப்பினதா ரம்மானை
திரியம் பகனுமைக்குச் செப்பினா னம்மானை.

(சிவன் மகிமையை விஷ்ணு இலக்குமிக்குச் சொன்னானென்றும், விஷ்ணு மகிமையை சிவன் பார்வதிக்குச் சொன்னானென்றும் புராணங்கள் வரலாறு சொல்லும் என்பதாம்.) (க)

ஆரணனை யாக்க வவனரனைத் தானாக்கக்
காரண கர்த்தன் கரியமா லம்மானை
காரண கர்த்தன் கரியமா லாமாயின்
காரண கர்த்தனுண்டே கண்ணுதலோ னம்மானை
கழறும் புராணந்தங் காரணனை யம்மானை.

(விஷ்ணு பிரமனைப்படைக்கப் பிரமன் ருத்திரனைப் படைக்க அதனால் விஷ்ணுவே சர்வத்திற்கும் காரண கர்த்தனென்றும், சிவனே சர்வத்திற்கும் காரண கர்த்தனென்றும் புராணங்கள் தம்முதலைக் கூறு மென்பதாம்.) (உ)

ஊழி தவஞ்செய் துணர்தற் கரியவன்காண்
ஆழியா னம்ப னடிகாணு னம்மானை
ஆழியா னம்ப னடிகாணு னுமாயின்
ஆழியாற் காணு னரனுண்டே யம்மானை
அறையும் புராணந்த மாதியனை யம்மானை.

(சிவனடியை விஷ்ணு தேடிக்காணுனென்றும், விஷ்ணுவைச் சிவன் தவம்செய்து காணுனென்றும் புராணங்கள் தம்முதலைக் கூறு மென்பதாம்.) (ன)

அரியை வழிபட் டரியி னடியவனுய்
அரியி னருளை யரன்பெற்று னம்மானை
அரியி னருளை யரன்பெற்று னுமாயின்
அரன்றனருள் பெற்று னரியுண்டே யம்மானை
அறையும் புராணந்த மாதியனை யம்மானை.

(சிவன் விஷ்ணுவை வழிபட்டு அவனருளைப் பெற்றுனென்றும், விஷ்ணு சிவனைவழிபட்டு அவனருளைப்பெற்றுனென்றும் புராணங்கள் தம்முதலைச் சொல்லும் என்பதாம்.) (௪)

ஆயும் பரம னமலன் பெருமான்றுன்
மாயனென்று கள்வனென்று மால்பேசு மம்மானை
மாயனென்று கள்வனென்று மால்பேசு மாமாயின்
பேயனென்று பித்தனென்று பேசுமர னம்மானை
பேசும் புராணமவர் பேர்வேட மம்மானை.

(பரமன் அமலன் பெருமான் என்று பேர்பெற்ற விஷ்ணு, மாயன் கள்வனென்று அழைக்கப் படுவானென்றும்,பரமன் அமலன்

பெருமான் என்று பேர்பெற்ற சிவன், பேயன் பித்தனென்று அழைக்கப் படுவானென்றும் புராணங்கள் அவர் வேடங்களைச் சொல்லுமென்பதாம்.) (௫)

எண்ணுங் குணங்குறிக ளில்லாப் பரமேசன்
மண்ணு னதுபுனைவன் மாதவன்கா ணம்மானை
மண்ணு னதுபுனைவன் மாதவனே யாமாயின்
வெண்ணீ றணியும் விடையேறி யம்மானை
விரிக்கும் புராணமவர் மேல்வேட மம்மானை.

(குணமுங்குறிகளுமில்லாத விஷ்ணு திருமண்காப்பு அணிவா னென்றும், குணமும் குறிகளுமில்லாத சிவன் வெண்ணீறு தரிப்ப னென்றும் புராணங்கள் அவர் வேடங்களைக் கூறுமென்பதாம்,) (௬)

மாதரைப் பற்றொழிய மாதர் தனைப்பற்ற
மாதர் மனங்கவர்ந்தான் மாதவன்கா ணம்மானை
மாதர் மனங்கவர்ந்தான் மாதவனே யாமாயின்
மாதர் மனங்கவரு மாதேவ னம்மானை
வகுக்கும் புராணமவர் மாணருளே யம்மானை.

(பெரிய உலகப்பற்றொழிந்து பகவானாகிய தன்னைப் பற்றும்படி விஷ்ணு கோபிகா ஸ்திரீகளுடைய மனதைக் கவர்ந்தானென்றும், சிவன் தாருகாவனத்து ரிஷிபத்தினிகளுடைய மனதைக் கவர்ந்தா னென்றும் புராணங்கள் அவரருளைச்சொல்லும் என்பதாம்.) (எ)

போரில் வலியன் புரமெரித்தான் காலத்தால்
போரிற்பின் னவன் புலியதள னம்மானை
போரிற்பின் னவன் புலியதள னாமாயின்
நாரணனும் பின்னவ னோடிய வம்மானை
நவிலும் புராணமவர் நாடகங்கா ணம்மானை.

(சிவன் அவ்வக் காலகருமத்திற்கேற்பப் போரில் பின்னிடைந்து போவனென்றும், விஷ்ணுவும் அங்ஙனமே உலகறியப் பின்னிடைவ னென்றும் புராணங்கள் அவர் நடனங்களைக் கூறுமென்பதாம்.) (அ)

முடிவில்குணக் குன்றின் முகடேறி நின்றார்
அடிகள் வெகுளி யரன்கொண்டா னம்மானை
அடிகள் வெகுளி யரன்கொண்டா னாமாயின்
அடிகள் வெகுளி யரிக்குமுண்டே யம்மானை
அறையும் புராணம்நீத் தார்பெருமை யம்மானை.

(நற்குணங்களாகிய மலைமேல் ஏறிநின்ற ரிஷிகளது சாபத்தைச் சிவன் பெற்றானென்றும், விஷ்ணுவும் ரிஷிகள் சாபத்தைக் கொண்டானென்றும் புராணங்கள் ரிஷிகள் பெருமையைச் சொல்லும் என்பதாம்.) (௯)

பெரியதோ ரூழிதனில் பேணு மயனுடனே
அரியை யழிக்கு மரனுண்டே யம்மானை
அரியை யழிக்கு மரனுண்டே யாமாயின்
அரனை வயிற்றி னளிக்குமரி யம்மானை
அறையும் புராண மவர்பெருமை யம்மானை.

(ஊழிக்காலத்தில் சிவன் பிரமனையும் விஷ்ணுவையும் கொன்றழிக்கிறானென்றும், ஊழிக்காலத்தில் விஷ்ணு பிரமனையும் சிவனையும் தன் குக்ஷியில் வைத்துக் காப்பாற்றுகிறானென்றும் புராணங்கள் அவர் பெருமையைக் கூறுமென்பதாம்.) (௧௦)

பரதெய்வம் தம்மதாப் பார்க்கும் புராணங்கள்
பரதெய்வ நிந்தை பகருங்கா ணம்மானை
பரதெய்வ நிந்தை பகருமே யாமாயின்
பரதெய்வம் தம்மதாப் பாராவோ வம்மானை . [மானை.
பாகமென்று கொண்டொன்றாப் பார்ப்பதுண்டே யம்

(தம் இஷ்ட தேவதையே பரதேவதை யாமென்று பார்க்கின்ற புராணங்கள் தம் தேவதையின் பெருமைக்காக இதரதேவதைகளை நிந்தை கூறுமென்றும், அங்ஙனம் நிந்தை கூறிய புராணங்களே இதர தேவதைகள் தம் சொந்த தேவதையின் பாகமென்று கொண்டு அபேதம் கூறுமென்றும் அறிவித்ததாம்.) (௧௧)

அந்தந்தப் புராணநிந்தை யந்தந்தத் தேவதையைச்
சொந்தமாக் கொள்ளும் துதியதுகா ணம்மானை
சொந்தமாக் கொள்ளும் துதியதுவே யாமாயின்
நிந்தை யுரைத்தலது நிந்தையன்றே வம்மானை
நிந்தைநகி நிந்தா நியாயமென்பா ரம்மானை.

(அந்தந்தப் புராணங்களில் இதர தேவதைகளினிந்தை தம் சொந்த தேவதையின் ஸ்துதிமாத்திரமென்றும், அந்நிந்தை அத் தேவ உபாசகரது பிரவர்த்தியின் பொருட்டாகலின் "நஹிநிந்தா நியாய"மென்று சொல்லட்படுமென்றும் அறிவித்ததாம்.) (கஉ)

அவரவர் தந்தொழிலே யாளு மவதரத்தில்
அவரவர்முன் னிற்பா ரரியரர்கா ணம்மானை
அவரவர்முன் னிற்பா ரரியரனு மாமாயின்
அவர்க ளிருவர்தமி லாரதிக மம்மானை
அவர்தந் தொழில ரவர்சமங்கா ணம்மானை.

(சிவ விஷ்ணுக்கள் அவரவர் தொழில் நடத்து மவசரத்தில் அவரவர் முன்னிற்பரென்றும், ஒத்த தொழிலுடைய அவ்விருவரும் ஒருவரோடொருவர் சமானரென்றும் அறிவித்ததாம்.) (கந)

அந்தகனைக் கொன்றவனு மண்ட மளந்தவனுந்
தந்தந் தொழிலாளர் தாஞ்சமங்கா ணம்மானை
தந்தந் தொழிலாளர் தாஞ்சமமே யாமாயின்
எந்தக் கடவு ளிருப்பதுமே லம்மானை
இருக்கு மொருகடவு ளம்சமிவ ரம்மானை.

(பிரம்ம வஸ்து ஏகமென்றும் அதன் அவசரமாகிய அம்சங் களே சிவ விஷ்ணுக்களென்றும் அறிவித்ததாம்.) (கச)

உலகை வெளிப்படுத்து மோம்பு மொழித்தொடுக்கும்
உலகில்மூன் றம்ச முலாவுங்கா ணம்மானை
உலகில்மூன் றம்ச முலாவுமே யாமாயின்

உலகிலிவை மூன்றுமதோ டொன்றன்றோ வம்மானே
ஒன்றென் றறிவாரே யுண்மைகண்டா ரம்மானே.

(சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரமென்னும் முத்தொழிலும் நடத்தும் பிரமா, விஷ்ணு, சிவன் என்னும் மூவரும் பிரமத்தின் மூன்றம்சங்களென்றும், இவ்வம்சங்களைப் பிரமத்தோடு ஒன்றெனவறிபவரே உண்மை யறிபவரென்றும் அறிவித்ததாம்.) (௩௫)

---

௬. விஷ்ணு சரிதை.

---

தரவுக் கொச்சகக் கலிப்பா.

மருவலர்பூ வாளிதொட்ட மன்மதனைக் கொன்றெரித்த
அரன்விழியை யிடந்தொறுக்க வரிபுகுதா னென்னேடி
அரியொடர னங்கியிலே யங்கமெனத் தக்கனுக்கே
அரியாஞேன் கழறுமுண்மை யதுகாணே சாழலே.

(விஷ்ணு எடுத்த மச்சாவதாரத்தின் செலுவையுங்கண்ணையும் சிவன் பறித்து அவனை அடக்கப்போனதுபோல், மன்மதனை எரித்துக் கொன்ற சிவனது கண்ணை விஷ்ணு பறித்து அவனை அடக்கப் போகான். ஆனால் விஷ்ணுவும் சிவனும் அவயவமுடைய புருஷனும் அவயவமும் போல் ஏகரூபமென்று சிவனை த்துவேஷம் செய்த தக்ஷனுக்கு விஷ்ணு புத்தி கூறுவான் என்பதாம்.) (௧)

வாமுனிமார்க் கண்டனுக்கா மறலியைமுன் கொன்று
[தைத்த
அரன்கழலைக் களைந்தொறுக்க வரிபுகுதா னென்னேடி
அரனன்று மறலியைக்கொன் றவனளித்த வந்தணனை
அரியளிக்கும் பிரளயத்தி லதுகாணே சாழலே.

(விஷ்ணு எடுத்த கூர்மாவதாரத்தின் முதுகோட்டைச் சிவன் பறித்து அவனை அடக்கப் போனது போல், யமனை உதைத்துக் கொன்ற சிவனது காலை விஷ்ணு பறித்து அவனை அடக்கப் போகான். ஆனால் சிவன் யமனைக் கொன்று தானிரட்சித்த மார்க்கண்டேயனை விஷ்ணு பிரளயகாலத்தில் காத்து இரட்சிப்பான் என்பதாம்.) (௨)

இருடிகடன் மேல்விட்ட விரும்புலியைக் கொன்றுரித்த
அரனகங்கள் கொண்டணிய வரிபுகுதா னென்னேடி
அரன்போய வக்காட்டி லரனார்க்கங் குதவியிட
அரிதுணையாச் சென்றிருப்ப னதுகாணே சாழலே.

(விஷ்ணு எடுத்த வராகாவதாரத்தின் கொம்பைச் சிவன் பறித்து அவனை அடக்கப் போனதுபோல், புலியை உரித்துக் கொன்ற சிவனது நகங்களை விஷ்ணு பறித்து அவனை அடக்கப்போகான். ஆனால் சிவனுக்கு அவன்சென்ற தாருகாவனத்தில் உதவி செய்ய விஷ்ணு அங்கேபோயிருப்பாரென்பதாம்.) (௩)

புரமூன்று மந்நாளிற் பொடியாகச் சுட்டெரித்த
அரனவனைத் தாக்கியிட வரிபுகுதா னென்னேடி
புரமெரித்தாற் கவனோடும் போயிருந்தா தரத்தோடும்
அரியுதவி செய்திடுவ னதுகாணே சாழலே.

(விஷ்ணு எடுத்த நரசிங்காவதாரத்தைச் சிவன் சரபபக்ஷியாய் நின்று தாக்கி அவனை அடக்கப்போனதுபோல், திரிபுரமெரித்த சிவனை விஷ்ணு தாக்கி அவனை அடக்கப்போகான். ஆனால் திரிபுரமெரித்த சிவனுக்கு விஷ்ணு தான் ஆதரத்தோடு உடனிருந்து உதவி செய்வான் என்பதாம்.) (௪)

அரனவனைச் செருக்கடக்கி யரனுதிரந் தான்தேக்கி
அரனென்பு கொண்டணிய வரிபுகுதா னென்னேடி
அரனவனைத் தன்னொருபா லழகாக வைத்தவரி
அரியரனு மோருருவ னதுகாணே சாழலே.

(சிவன் விஷ்ணுவின் செருக்கை யடக்கி அவன் உதிரத்தைக் கொண்டு அவனெலும்புகளைத் தரிக்கப் போனதுபோல், விஷ்ணு சிவனது செருக்கை அடக்கி அவனுதிரத்தைக் கொண்டு அவன் என்புகளைத் தரிக்கப் போகான். ஆனால் விஷ்ணு சிவனைத் தன் ஒரு பாகத்திற் கொண்டு சங்கரநாராயணனாய் ஏகருபமாவன் என்பதாம்.) (௫)

அரனவனே பரமென்றது கறைந்திட்ட வியாதமுனி
கரமதனை யரியூர்தி களையவரா னென்னேடி

அரனவனே தானென்ன வர்ச்சுனனுக் கந்நாளில்
திரமுடனே யரியுணர்த்துந் திறமதுகாண் சாழலே.

(தன்வழக்கின்படி ஓர்சமயம் விஷ்ணுவே பரமென்று கூறிய வியாசனது கையை நந்திவெட்ட சிவன் இடங்கொடுத்ததுபோல், மற்றோர் சமயம் சிவனே பரமென்று கூறிய அவ்வியாசனது கையைத் தன் திருவடி ஒருவரும் வெட்ட விஷ்ணு இடங்கொடான். ஆனால் சிவனே தானென்று விஷ்ணு அருச்சுனனுக்கு உண்மை போதிப்பானென்பதாம். வியாசன் வழக்காவது—அந்தந்தப் புராணங்களில் அந்தந்தத் தேவதையே பரமென்று கூறுவது.) (சு)

பிரமனவன் தலைகொய்து பிரமன்றன் கபாலமதை
அரியானேன் தன்கைக்கொண் டணியவரானென்னேடி
பிரமனவன் கபாலங்கொள் பித்தனைமற் றதுவொழிய
அரியன்றே விடுவிக்கு மதுகாணே சாழலே.

(சிவன் பிரமனது தலையை வாங்கி அவனது கபாலத்தைக் கைகொள்ளப் போனதுபோல், விஷ்ணு பிரமனது தலையை வாங்கி அவனது கபாலத்தைக் கைக்கொள்ளப் போகான். ஆனால் பிரமனது கபாலத்தைக் கைக்கொண்ட சிவனை அக்கபாலம் அவன் கையினின்றும் விடுபடும்படி விஷ்ணு உதவி செய்வான் என்பதாம்.) (எ)

இருடியர்தஞ் சாபத்தா லிலிங்கமது பேர்ந்திடவே
அரியானே னிலிங்கமதா வமர்ந்திலனீ தென்னேடி
அரனரைப் பூசிக்க வர்ச்சுனனுக் கரணியத்தே
அரியானே னிலிங்கமதா வமர்ந்தனன்காண் சாழலே.

(இருஷிகள் சாபத்தினால் இலிங்கம் பேர்ந்து சிவன் இலிங்க ரூபமாயமர்ந்ததுபோல், இருஷிகள் சாபத்தினால் இலிங்கம்பேர்ந்து விஷ்ணு இலிங்க ரூபமாய் அமர்ந்தானில்லை. ஆனால் ஆரணியத்தில் அருச்சுனன் சிவனைப் பூசிப்பதற்காக விஷ்ணு சிவலிங்க ரூபமாய் அமர்ந்தானெனபதாம். சிவலிங்கம், யூஸ்தம்பமென்பர்பெரியோர்.) (அ)

## ச. தசாவதாரம்.

### கலித்தாழிசை.

முனம்வரு வெள்ளத்து முன்னுல கழிய
மனுவைப் புரந்தான்மா னுந்தீபற
மச்ச வடிவன்கா ணுந்தீபற.

(பழைய வுலகம் பிரளயத்திலழிந்திட மனுவைக்காத்து இரட்சித்தான் மச்சாவதாரன் என்பதாம். சோமுகாசுரனைக் கொன்று அவனொளித்திட்ட வேதங்களை மீட்டது இக்காலத்திலாம் என்றறிக.) (க)

அமரர்நோய் தீர வமிழ்த முதிக்க
சிமயத்தைத் தாங்குமா னுந்தீபற
சீர்பெறு கூர்மங்கா ணுந்தீபற.

(தேவர்கள் துக்கம் தீரத் திருப்பாற்கடலில் அமுதமுண்டாக மத்தாகிய மந்தரகிரியைத் தாங்கி நிறுத்தினான் கூர்மாவதாரன் என்பதாம்.) (உ)

அவுணனைச் செற்றங் கலைகடல் புக்க
புவியைமேல் நாட்டுமா னுந்தீபற
புகழ்சேர் வராகங்கா ணுந்தீபற.

(துஷ்ட இரணியாக்ஷனைக் கொன்று ஜலத்தில் மூழ்கிய பூமியை மேலே தூக்கி நிறுத்தினான் வராகாவதாரன் என்பதாம்.) (ந)

கடவுளே யில்லெனுங் கனகனை மெய்பிளந்
தடியனைக் காத்தான்மா னுந்தீபற
அரியுரு வானன்கா ணுந்தீபற.

(கடவுளில்லை யென்று கூறி உலகத்தார் தன்னையே தெய்வமாகக் கொண்டாடும்படிச் செய்த இரணியனை உடல் பிளந்து பக்தனாகிய பிரகலாதனைக் காத்து இரட்சித்தான் நரசிங்காவதாரன் என்பதாம்.) (ச)

மண்மூ வடிபண்டு மாவலி பாற்கொண்டு
விண்ணை யளித்தான்மா னுந்தீபற
வித்தகன் வாமன னுந்தீபற.

(தேவலோகம் முதலிய மூவுலகையும் கைப்பற்றிய மாபலி சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண்கொண்டு தேவர்களை இரட்சித்தான் வாமனாவதாரன் என்பதாம்.) (ரு)

கொடுங்கோ லரசர் குலமுதல் மாய்த்துப்
படியை யளித்தான்மா னுந்தீபற
பரசுடை ராமன்கா ணுந்தீபற.

(கொடுங்கோல் செலுத்திய அரசர் குலத்தை வேரோடறுத்து உலகத்தை இரட்சித்தான் பரசுராமாவதாரன் என்பதாம்.) (சு)

வன்க ணரக்கர் மடியப் புவிதனில்
தன்மத்தை நாட்டுமா னுந்தீபற
தசரத ராமன்கா ணுந்தீபற.

(கொடிய இராட்சதரை அழித்துப் பூமியில் தர்மத்தை நிலைநாட்டினான் இராமாவதாரன் என்பதாம்.) (எ)

துவிதன் முதல்பல துட்டரைக் காய்ந்து
புவியைப் புரந்தான்மா னுந்தீபற
புகழ்பல ராமன்கா ணுந்தீபற.

(துவிதன் முதலிய துட்டரை ஒழித்து உலகை இரட்சித்தான் பலராமாவதாரன் என்பதாம்.) (அ)

பாரதந் தீர்த்துப் பதகர்கண் மாய்ந்துக
பாரத்தைத் தீர்த்தான்மா னுந்தீபற
பங்கயக் கண்ணன்கா ணுந்தீபற.

(பூமியில் பாதகர்கள் அழிந்திடப் பாரதம் முடித்துப் பூபாரம் தீர்த்தான் கிருஷ்ணாவதாரன் என்பதாம்.) (கூ)

மறங்கூர் பதகரை மாய்த்தே கலியில்
அறநிலை யாக்குமா னுந்தீபற
அசுவமாங் கற்கிகா ணுந்தீபற.

(கலியுக முடிவில் பாதகர்களை அழித்துத் தர்மத்தை நிலைநாட்டுவான் கற்கி அவதாரன் என்பதாம்.) (க0)

## ரு. சிவவிஷ்ணு ஸ்வரூபம்.

### அகவல்.

ஆதியு நடுவு மந்தமு மின்றி
ஓதிய குணங்குறி யொன்று மின்றி
உருவு மருவு மல்லா துயர்ந்த
சொருவ சச்சிதா நந்தச் சோதி
தன்னில் சுத்த சத்தியா மெனனப்
பன்னு முக்குணப் பகுதியா மாயையில்
சர்வ சக்தன் சர்வ ஞானி
சர்வ பூரணன் தானு மீசன்
சுத்த விரசில் தோற்றிப் பிரமனாய்
சத்துவ குணத்தில் தகைசேர் விண்டுவாய்
சுத்த தமசில் தூயருத் திரனாய்
அத்திரு வுருவுக் காந்திறங் கொண்டு
ஆக்கவு மளிக்கவுஞ் சீவர்தம் வினையால்
நீக்கவு மூன்று மூர்த்தியாய் நேர்வன்
தீயவை யொழியச் செம்மை நிலைபெறத்
தூய மூர்த்திகள் தோன்றுவ துலகில்
காக்குங் கடவுள் விண்டுவா தலினால்
ஆக்குந் தன்பிறப் பனந்த மென்ப
சுத்த மசுத்தந் தோய்ந்து நின்றும்
சுத்த மசுத்தந் தோயார் புனிதர்
நல்லவும் பொல்லவும் நாடிச் சார்ந்தும்
நல்லவும் பொல்லவும் நாடா ரமோகர்
புலவரு மவுணரும் பொருதலே யன்றிப்
புலவர் தம்மில் பொருத லில்லை
புகழ்ச்சியே யன்றிப் புத்தே ளவர்க்கு
இகழ்ச்சி யில்லை வேதத் தென்ப
உலகில் மதியின ரொருவகை யல்லர்
பலவகை யாகப் பயின்றுள ராதலின்
அவரவர் மதிவழி யன்புமீ தூர
அவரவர் தெய்வ மதிகமா மென்றே

புகழ்ந்து மேனைப் புத்தே ளவரை
இகழ்ந்துங் கூறு மென்ப புராணம்
பத்தர் பரிவால் பகர்வர் கடந்து
மத்தரு மதத்தால் வழுத்துவர் மீறி
சில முடனே திண்மை யதனைப்
பாலு ணன்னப் பறவையிற கண்டு
அரியு மரனுமோ ரவனுரு வென்றே
பரிவுடன் தெரிவர் பண்டிதர் தாமே.

(ஆதியந்தங் குணங்குறிக ளில்லாது உருவும் அருவு மகண்ட சச்சிதானந்த சொரூப பிரமமந்தானே தன் னிஷ்டத்தில் தோன்றும் முக்குண வடிவ சுத்த மாயாசத்தியிலே சர்வ சக்த சர்வஞான சர்வ பூரணனாய்த் தோன்றும் சாம்பசிவரன், சுத்தரஜோகுணத்தில் பிரமனும், சுத்தசத்துவகுணத்தில் விஷ்ணுவாயும், சுத்த தமோகுணத்தில் ருத்திரனுயும அவ்வடிவுகளுக்குத் தக்க குணங்குறிகளாகிய திறங்களைக் கொண்டு, வாகாமத்திற் கேற்ப உலகை ஆக்கியும், அளித்தும், அழித்தும் அமைந்து அபாதத்தியபடத் தோன்றுவர், அம்மூவரும் மூர்த்திகளும் ஏகத்தன்மை பொருந்து ஒற்றுமையுண்டாக அபபிராயிருந்தப் பிறவியெடார். விஷ்ணு இரட்சிக்கு மூர்த்தியாதலின் அவனுக்குப் பல பிறவிகள் யுண்டென்பர். அம்மூர்த்திகள் சுத்தம், அசுத்தம், நாமம், நன்மை இவற்றின் கலப்பதும் கலவாதவராவர், வேதத்தில் தேவரும் அசுரரும் பொருதலேயன்றித்தேவருள் ஒருவரோடொருவர் பொருதலில்லை, வேதத்தில் தேவதைகளுக்குப் புகழ்ச்சியே யன்றி இகழ்ச்சியில்லை யென்பர். ஆனால் புராணங்கள் உலகில் உபாஸகர்து மனோபாவங்களை நோக்கி அவ்வுபாஸகர்க்குத் தம் தேவதையிடம் அன்பு மிகும்படித் தம் தேவதையை உயர்த்தியும், இதர தேவதைகளைத் தாழ்த்தியும் கூறுமென்பர். பத்தரும் அன்பு மிகுதியால் கடந்து சொல்வர், மதோன்மத்தரும் மதத்தால் அளவு கடந்து பேசுவர், ஆதலின் நீரைப் பிரித்துப் பாலைப் பருகும் அன்னம் போல உண்மையை அறிந்து சிவனும் விஷ்ணுவும் ஒரே கடவுளது ரூபமென்று தெரிவர் பண்டிதர் என்பதாம்.)

சுபம். சுபம். சுபம்.

## அப்பைய தீக்ஷிதர்.

"ஜகத் அதீசுவரனாகிய ஜனார்த்தனனாயினுஞ்சரியே, ஜகத் முடிவை யுண்டாக்கும் மகேசுவரனாயினுஞ்சரியே, இவர்களுக்குள் வஸ்துபேத மென்ப தெனக் கில்லவே யில்லை. ஆயினும் என்பக்தி பிறைசூடியான பெருமானி டமே பாய்ந்தோடுறது."

---

## லீலாசுகர்.

"யாங்களோ சைவர்கள், அதைக் கேட்கவேண்டிய தே யில்லை. அதிலும் பஞ்சாக்ஷரத்தை மிகுதியாய் ஜபிப் பவர்கள். ஆயினும் என் மனம் காசாம்பூ நிறத்தனாயும் கோபஸ்திரீகளிடம் குழந்தையாயும் வளருகிற புன்சிரிப் போடு விளங்கும் கிருஷ்ணமூர்த்தியையே நாடுகிறது."

---

## புஸ்தக விளம்பரம்.

---

விவேகாநந்த சுவாமி ஸ்தோத்திரம், மூலமும்
 பொழிப்புரையும் ... ... ரூ. 0—0—6

சில விஷ்ணு விவேகம், மூலமும்
 கருத்துரையும் ... ரூ. 0—1—6

இங்ஙனம்

M. S. பத்மநாப நாயுடு,

கிளார்க்-இன்-சார்ஜ்,

தென் இந்தியா றயில்வே புக்கிங் ஆபீஸ்,

திருவல்லிக்கேணி, சென்னை.